


ஆண்டு : 37 பிப்ரவரி 1972 இதழ் : 2



ஆசிரியர்கள்

பத்திராதிபர் : திருலோக சீதாராம்

ஆங்கிலப் பகுதி : T. N. ராமச்சந்திரன், B.COM. B.L.

காப்பாளர் : அழகு பெரியசாமி

**ஆண்டுக் கட்டணம் ரூ. 10**

அலுவலகம் : 2-A, கோட்டை ஸ்டேஷன் ரோடு, திருச்சி-2. (தொலைபேசி : 4848)



அட்டை : தீர்த்த நாராயணன் உற்சவம் திருப்பூந்துருத்தியில் நடைபெறுகிறது.




மாதவம் சிறந்து
மாநிலம் உயர்க

# மாநில சுயாட்சி

மாநில சுயாட்சி என்றதும் நாட்டுப் பிரிவினை என்ற வியாக்கியானமும் அதற்கான எதிர்ப்பும் ஏன் என்பது விளங்கவில்லை. நாட்டுப் பாதுகாப்பு, தபால்தந்தி, ரயில், கப்பல் போக்குவரத்துப் போன்றவைகளை மத்தியில் வைத்துக்கொண்டு அந்தந்த மாநிலமும் வளர்வதற்கு வேண்டிய சுதந்திரம் கொடுத்தால் தவிர, மத்திய சர்க்கார் என்பது ஒரு நிர்ப்பந்தமாகத்தான் இருக்கும்.

வளர்ந்துவரும் பொருளாதாரத்தில், அந்தந்த பிராந்தியங்களும், தகுதிக்கும் வாய்ப்புக்களுக்கும் ஏற்றபடி வளர்வதற்கு இன்று எவ்வித சூழ்நிலையும் கிடையாது. எதற்கெடுத்தாலும் மத்திய அரசாங்கத்தின் கண்மூடித்தனமான சட்டாம்பிள்ளைத்தனத்துக்கு ஈடுகொடுத்தாகவேண்டிய நிலைதான் இன்று இருக்கிறது. திமுக ஆட்சி செய்வதனாலேயே மாநில சுயாட்சி தவறு என்று தீர்மானம் செய்துவிடக்கூடாது. மாநிலத்தில் எந்த ஆட்சி வந்தாலும் இன்றுள்ளதைக்காட்டிலும் அதிக அதிகாரங்கள் தேவை என்பதை மறைப்பதற்கில்லை.

எதற்கெடுத்தாலும் டில்லிக்குக் காவடி தூக்குவது ஒரு நாளும் பிராந்திய ஏற்றத் தாழ்வுகளைப் போக்கிவிடாது. மேலும் மேலும் மாநிலங்கள் பரஸ்பரம் பிணங்கவும் என்றோ ஒருநாள் நாடு பிரிந்து பல துண்டுகளாகவும்தான் போகும்.

தவிர பர்மிட் லைசென்ஸ் முறைகளில் மத்திய அரசாங்கம் இன்று கொண்டிருக்கும் ஏகபோகம் போய்த் தொலைந்து மாநிலத்தில் உள்ள வசதி வாய்ப்புக்களைப் பயன்படுத்த வழி ஏற்பட வேண்டும். தனி மனிதன் வர்த்தகம் செய்யவோ பொருளீட்டவோ விலங்கம் இல்லாத துறை இன்று ஒன்றுகூட இல்லை.

மாநிலங்களுக்கு சுயாட்சி வருவது நல்லதுதான். ஆனால் பர்மிட் லைசென்ஸ் ஆட்சியும் அத்துடன் முடிவடைய வேண்டும். சோஷலிஸம் என்று சொல்லிக்கொண்டு தனி மனிதனைக் காலிலும் கையிலும் விலங்கிட்டு, லஞ்சமும் ஊழலும் பெருக்கும் மத்திய, மாநில அரசாங்க அதிகாரங்களும் குறைய வேண்டும்.

எனவே மாநில சுயாட்சிக் கோரிக்கை நிறைவேற வேண்டியதுதான். பொருளாதாரத்திலும் தொழில் துறையிலும் இன்றுள்ள அரசாங்க ஏகபோகமும் போய்த் தொலைய வேண்டியதுதான்.

— பத்திராதிபர்




## இலக்கியச் சித்தர்

இருபத்தாறு வயது இலக்கியச்சித்தர், பி. ஆர். ராஜமையரின் நூருவது பிறந்தநாள் சென்னையிலும் வத்தலகுண்டிலும் குதூகலத்துடன் கொண்டாடப்பெற்றது.

விழாச் செயலாளர்கள் பி. எஸ். ராமையா, சி சு. செல்லப்பா இருவரும் வத்தலகுண்டுக்காரர்கள். மற்ருெருவரான சிட்டி அண்மையிலுள்ள பெரியகுளம். ஈழத்துச் சிவபாத சுந்தரமும் இவர்களுடன் கூடிச்சாதித்த இந்த இலக்கிய விழா, பரஸ்பரம் பல்லாண்டுகள் சந்திக்கவும் வாய்ப்பில்லாதிருந்த எழுத்தாள நண்பர்கள் தங்கள் உறவையும் திறத்தையும் தாங்களே நினைவு படுத்திக் கொள்ளச் செய்யும் அருமருந்தாக அமைந்தது.

ராஜமையருடைய சாதனைகளின் சிறப்பு 'கமலாம்பாள் சரித்திரம்' என்ற அரிய நவீனத்தை தமது 21 வயதில் அதாவது சுமார் 80 வருடங்களுக்குமுன் தமிழில் இயற்றியது. தமிழ் நாவல் உலகின் முன்னேடி அவர். அத்துடன் அவர் சுவாமி விவேகானந்தரால் பாராட்டப்பட்டு 'பிரபுத்த பாரத' என்ற ஆங்கில சஞ்சிகையின் ஆசிரியராகப் பணிமேற்கொள்ளும்படி அழைக்கப்பட்டார். அவருடைய வாழ்வில் பிறரறியாமல் மறைந்துகிடக்கும் உணர்ச்சிபூர்வமான செய்திகளே என் நினைவில் எழுகின்றன.

இருபத்தாறு வயதில் இறந்துபோன அவருக்குப்பின் அவருடைய மனைவியார் இப்பால் 57 வருடங்கள் உயிர்வாழ்ந்து பதினைந்து வருடங்களுக்கு முன்புதான் மறைந்து போனுர் என்று தெரிகிறது. அந்தக் காலத்து வழக்கப்படி பத்துப் பனிரண்டு பிராயத்திலேயே அவருக்குத் திருமணம் நடந்திருக்கவேண்டும். அவர் காலமாகும்போது அவருடைய மனைவியாருக்குப் பத்தொன்பது அல்லது இருபது பிராயங்களே ஆகியிருந்திருக்கும். கடைசி மூன்று வருடங்கள் வேதாந்த பரமான உணர்வுகளில் ஈடுபட்டு மனைவியுடன் பேச்சுவார்த்தைகூட இல்லாமல் காலம் கழிந்திருக்கிறது. மாமேதையான ஒருவருக்கு வாழ்க்கைப்படும் பேறுபெற்ற அந்தப் பெண்மணி தமது பதினறு பிராயத்திலேயே கணவரின் பட்சத்தைவிட்டு விலகியிருக்கவேண்டியுவரானுர்.

காலமாவதற்கு முன்புதான், தமது மனைவியின் நினைவு வந்திருக்கிறது. ''சில காலமாக உன் சிலம்போசை காதில் விழவில்லையே'' என்று பரிவுடன் மனைவியிடம் கேட்டார் என்ற செய்தி அந்த இரு உயிர்களின் உணர்வுலகில் ஏற்பட்ட மர்ம விரகத்தைப் பேசுகிறது. உபநிஷத் போன்ற உன்னதப் பயிற்சிகளும், யோகப் பயிற்சிகளும் அவருக்கு என்ன நன்மை விளைத்தனவோ, அவருடைய மனைவிக்கு மாமேதையை மணந்த துயரத்தையே கொடுத்திருக்கிறது. இறுதிக் காலத்தில் பரிவுடன் மனைவியை நோக்கியிருக்கவேண்டுமென்பதை அவருடைய சொற்கள் நமக்குக் காட்டுகின்றன.

வாசஸ்பதி மிச்ரர் என்ற மகான் பிரம்ம சூத்ர பாஷ்யம் இயற்றினுர். அவர் எண்ணற்ற பாஷ்யங்கள் இயற்றியிருக்கிருர். அவருடைய மனைவி, கணவரின் சேவைக்கு எவ்வித பங்கமும் வரக்கூடாதென்ற பரிவுடன் இல்வாழ்க்கையின் சாரீரமான சுகங்களுக்குக் காத்திராமலும் அவருடைய நினைவைத் தன்பால் கவராமலும், நிறைகாத்து நெடுங்காலம் துணையாக இருந்திருக்கிருர்.

மேற்கொண்ட பணி முற்றுப்பெற்ற பின்னர்தான் வாசஸ்பதி மிச்ரருக்கு இது காறும் தன்னுடன் ஒரே குடிலில் வாழ்ந்து வரும் மனைவி என்ற அந்தப் பேதையின் நினைவு வந்திருக்கிறது. அறியாப் பருவத்தில் பாணிக்கிரகணம் செய்துகொண்டு வந்த அந்தப் பெண் இப்போது நரையோடிய கூந்தலுடன் நிற்பதை முதன்முறையாகக் கவனிக்கிறார். அவருக்கே இத்தனை காலமா இடையில் ஆயிருக்கிறது என்ற வியப்பும் மனைவிக்குத் தான் காட்டவேண்டிய இங்கிதங்கள் எதையும் காட்டமுடியாமல் பெரும் பணி காலமெல்லாம் கவர்ந்துகொண்டு விட்டதென்ற உண்மையும் புரிகிறது. அந்தப் பெண்ணின் இளமையை விழுங்கி ஏப்பமிட்டு விட்டு சிரஞ்சீவியாக நிற்கும் "பாஷ்யத்துக்கு" மனைவியின் பெயரான "பாமதி" என்பதையே சூட்டுகிறார்.

ராஜமய்யர் வாழ்வில் அவர் முடித்த இலக்கிய வேதாந்த சாதனைகளுக்கெல்லாம் அவரது இளம் மனைவி செய்த தியாகமே அடிப்படையாக இருக்கவேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

அவர் ஆங்கிலப் பேரிலக்கியங்களிலும், தமிழ்ப் பேரிலக்கியங்களிலும் பண்டைய வேத உபநிஷத்களிலும் ஊறித் திளைத்ததனாலேயே அவர் அற்புதமான இலக்கியங்களைப் படைத்தார், வேதாந்தக் கட்டுரைகளும் விளக்கங்களும் இயற்றினார் என்று பாராட்டப்படுகிறது. அந்தச் சின்ன வயதில் அவர் சாதித்தவற்றைப் பார்க்கும்போது; அவர் கற்றறிவால்மட்டும் அத்தகைய சாதனைகளைப் புரிய முடிந்தது என்று சொல்லக்கூடவில்லை. கருவிலே திருவுடையாராக அவர் இருந்தமையாலேயே எளிதில் எதனையும் கற்றுணரும் ஆற்றல் அவருக்கு இருந்தது. எதனையும் தெளிவாக அவரால் இயற்ற முடிந்தது என்பதே உண்மை.

யோக நிஷ்டைகளில் ஏதோ பிசகு நேர்ந்த காரணத்தால் அவர் அகால மரணமடைந்தார் என்ற வதந்தியும் அந்தக் காலத்தில் இருந்திருக்கிறது. சிறுவயதில் வேதாந்த விஷயங்களைப் படிக்கும் பிள்ளைகளிடத்தில் கவலை காட்டும் பெற்றோர் இந்தக் காலத்திலும் இருக்கிறார்கள்.

உண்மையின் உயர்வு அல்லது வாசுதேவ சாஸ்திரி என்று பின்னாளில் மொழி பெயர்க்கப்பட்ட "True Greatness" என்ற நவீனம் ஒரு ஜீவன் முக்தனுடைய வாழ்வைக் கலையாற்றலுடன் சித்தரிப்பது. இதைப் படித்தால்தான் ராஜமையர் இனம் தெரியாத ஹடயோக சாதனைகளில் வழிதவறிப் போயிருக்கக்கூடிய சிறுபிள்ளையல்லவென்றும் அவரே ஒரு ஜீவன் முக்தராக வாழ்ந்தவர் என்றும் எளிதில் கண்டுகொள்ளலாம். பிரமிப்புத் தருவதெல்லாம் அவ்வளவு சிறு வயதில் இவ்வளவு சாதனைகளை அவர் எப்படி சாதித்தார் என்பதுதான். ஆதிசங்கரைவிடக் குறைந்த வயது. வயது வந்தவர்களுக்குப் பொறுமை தருவதும்கூட

நூதன விவேகியுள்ளம் நுழையாது
நுழையுமாகில்
பூத ஜன்மங்கள் கோடி புனிதனும்
புருடனாமே

என்கிறது கைவல்யம் ஆம் புருடன் என்பது பரப்ரம்மம்தான். அதன் அலகிலா விபூதியில் ராஜமையர் என்ற வியக்தியும் ஒன்று. தமிழும் தமிழ் நாடும் செய்த பாக்கியம், அவர் நம்மிடை வந்து பிறந்தார்.

ராஜமையர் பெயரால் வத்தலகுண்டில் நினைவு மண்டபம் எழுப்ப வேண்டுமென்று சி. சு. செல்லப்பா முயல்கிறார். அவருக்குக் கைகொடுக்க நண்பர்கள் முன்வரவேண்டும்.

# மாரியாத்தா  சிரித்தாள்

நாடகம்

'ஜானகிமைந்தன்'

சோமு : என்ன கோபாலு, சௌக்யமா? கொளந்தை பொறக்கப்போற சந்தோ சத்தில ஏக குஷியா இருக்காப்பல இருக்கு?

கோபால் : ஆமாம் மாமா... உக்காருங்க... பின்னே இருக்காதா? கல்யாணங்கட்டி ஏளு வருஷத்துக்கப்பறம் இப்பத்தானே என் ஆசை நிறைவேறுது.

சோமு : அது என்னமோ கரெக்கட்டு தான்... நம்ம சனங்கள்ளயே நீ ஒத்தந் தானே இப்படி நல்ல நிலைமையிலே இருக்கே...

கோபால் : அது வாஸ்தவந்தான். எல் லாம் என் வூட்டுக்காரி ராதை வந்த வேளைதான்... ஒரு மாடு வெச்சுக்கிட்டு பால் வியாபாரம் பண்ணிக்கிட்டிருந்த வன் இன்னிக்கு ஒரு பால் பண்ணையே வெச்சிருக்கேன்... பெரிய வீடு, நில, புலம்னு, நம்ம சனங்களே பொருமைப் படற அளவுக்கு இருக்கேன்...

சோமு : பொருமைப்படறதுக்கு ஒரு அளவு வேணுமா... ஒண்ணும் இல்லாத வன் இருக்கறவனைப்பார்த்து, இருக்கற வன் இன்னும் இருக்கறவனைப்பார்த்து, அவன் அடுத்தவனைப் பார்த்துன்னு பொருமை போயிக்கிட்டே இருக்கும்... இதோ புள்ளையில்லாக்குறையும் தீரப் போவுது... மாரியாத்தா இருக்கா நான் வரட்டுமா ...

கோபால் : இருங்கமாமா... என்ன அவ சரம்... சாப்புட்டுட்டுப் போவீங்களாம் ... ஒங்களுக்குப் பிடிச்ச கருவாட்டுக் கொளம்பும் கத்திரிக்காய்ப் பொறியலும் இன்னிக்கு நம்ம வீட்லே... என்ன நீங்க கிளம்பறீங்க.

சோமு : அடடே... அப்படியா... அப்ப சரி... ராதே கொளம்பு வச்சதுன்னு அது தனி ருசிதான்...

கோபால் : மாமா...ராதே அடுப்பாங்கரைக் குப் போறதே இல்லே கொஞ்சநாளா... எல்லாம் அவங்க அம்மாதான்.

சோமு : ஓஹோ... ஆமாம்... ஆமாம்... இப்ப ராதேக்கு ஒரு வேலையும் கொடுக் கப்படாதுதான். ஏன்னு முதகொளந்தை பாரு...

கோபால் : ஆமா மாமா ... நெதம் பொம்பளை டாக்டர் வந்து பார்த்துட்டுப் போறுங்க. டானிக், மருந்து அது இதுன்னு வாங்கிக் குடுக்கறேன். ஏன்னு ...

சோமு : எனக்குத் தெரியும் தம்பி... சொல்லவேணும்... சரி வா... சாப்பிடப் போவோம்...

★★★

கோபால் : என்னபுள்ளே இது? நான் எவ்வளவு சொல்லியும் கேக்க மாட்டேங்கறே? ஏன் இவ்வளவு வேகமா நடக்கறே... உம்...?

ராதை : அட... என்ன நீங்க... என்னமோ கலாட்டா பண்ணிகிட்டு... அதிருக் கட்டும்... நான் சொன்னதை மட்டும் நீங்க கேக்கறீங்களா?

கோபால் : நீ என்ன சொல்லி நான் கேக்கலே...?

ராதை : நானும் இந்த வீட்டுக்கு வந்த துலேருந்து சொல்லிகிட்டிருக்கேன், அந்தக் கெட்ட பழக்கத்தை விட்டுடுங்க விட்டுடுங்கன்னு... கேக்கறீங்களா?

கோபால் : ஓஹோ... அதைச் சொல்றியா ... இதபாருபுள்ளே... என்னமோ கெட்ட பழக்கம்கறியே... ஊர்ல ஒலகத்ல செய் யாததையா நான் செய்யறேன் ... பெரிய

பெரிய நகரத்திலெல்லாம் இதுதான் பழக்கம்...

ராதை: மத்தவங்களுக்கு பழக்கம்னு ... நமக்கும் வேணுமா? இத்தனை நாள் நடந்தது நடக்கட்டும். இனியாவது அந்த பழக்கத்தை விட்டுடுங்களேன்...

கோபால்: (கோபமாக) இதபாருபுள்ளே. நீ வேற என்ன வேணும்னாலும் சொல்லு கேட்டுக்கறேன். இதைப்பத்தி மட்டும் இனிமே பேசாதே... ஆமாம்...

ராதை: உம்... எனக்கென்னவோ பயமாயிருக்கு...

கோபால்: ஒனக்கென்ன பயம் புள்ளே? நேரம் ஆவுது... படுத்துத்தூங்கு... ஆமாம்... இன்னிக்கு டாக்டரம்மா என்ன சொன்னாங்க?

ராதை: இன்னும் ஒரு வாரத்தில் புள்ளெ பொறந்திடும்னாங்க?

கோபால்: (சந்தோஷமாக) ஆகா ... இன்னும் ஒரு வாரத்தில் குட்டி கோபாலு ... ஹையா ...

ராதே: (Aside) மாரியத்தா...என்ன சொன்னாலும் கேட்கமாட்டேங்கறதே? அந்த கெட்ட பழக்கத்தை விடறதுக்கு நீதான் வழிசெய்யணும்... மாரியாத்தா...

கோபால்: தா...தூங்குபுள்ளே...நேரமாச்சில்லே.

*வீதி*

சோமு: கோபாலு...ஏய் கோபாலு...

கோபால்: என்ன மாமா ... கூப்பிட்டீங்களா...ஏன் இப்படி ஓடி வரீங்க?

சோமு: கோபாலு ... ராதைக்கு வலியெடுத்து, மோசமாப்போயி பெரிய ஆசுபத்திரிக்கு கூட்டிக்கிட்டு போயிட்டாங்கடா... சமயத்தில் ஒன்னையைக் காணோம்... ஆமாம் எங்கேடா போயிட்டே?

கோபால்: ஏன் மாமா... புள்ளை புறக்கத்தான் இன்னும் 4, 5 நாளு இருக்கே...

சோமு: அதை நம்பி நீ வெளியே கௌம்பினயாக்கும். வா பேசிக்கிட்டே நடக்கலாம்.

கோபால்: சரி மாமா ஏன் மாமா நம்ப டாக்டரம்மா பாக்கலியா... ஆஸ்பத்திரிக்கு எதுக்கு...

சோமு: தம்பி... டாக்டரம்மா பாத்துட்டுத்தான் ஆஸ்பத்திரிக்கு அனுப்பச் சொன்னாங்க...ரொம்படேஞ்சர் ஆயிடுச்சாம்...

கோபால்: (அழுதுகொண்டே) ஐயையோ ... ராதே... நீ பயந்தபடியே ஆயிடும் போல இருக்கே... மாரியாத்தா என்னைக் கைவிட்டுடாதே...

சோமு: தம்பி... சின்னபுள்ளையாட்டம் ஏன் அழுதுகிட்டு... நல்லவேளை... இதோ... குருதைவண்டி வருது... ஏறிகிட்டு வெரசா ஆஸ்பத்திரிக்குப்போவலாம்... ஏய் வண்டி...

*ஆஸ்பத்திரி*

கோபால்: டாக்டரய்யா, ராதேக்கு இப்ப எப்படியிருக்கு? உசுருக்கு ஒண்ணும் ஆபத்தில்லயே?

டாக்டர்: உம்... நீங்க patientக்கு என்ன வேணும்?

கோபால்: ராதே எம்பொஞ்சாதீங்க... சொல்லுங்க அவளுக்கு எப்படியிருக்கு ... ?

டாக்டர்: கொஞ்சம் serious ஆத்தான் இருக்கு... நல்ல வேளை லேடி டாக்டர் டயத்துக்கு இங்க அனுப்பிச்சதாலே கொஞ்சம் chance இருக்கு... பெரிய டாக்டரே caseஐ அட்டெண்ட் பண்றாரு... நாங்க எங்களால் ஆனதை செய்யறோம். அப்பறம் ஆண்டவன் இருக்கான் ... Allright ... இங்கே ஒக்காந்துக்குங்க ...

கோபால்: சரிங்க... மாமா... எனக்கென்னமோ பயம்மாயிருக்கே...

சோமு: தம்பி பயப்படாதே...மாரியாத்தா பாத்துக்குவா...

* * *

பெ. டாக்டர்: மிஸ்டர் கோபால்... எங்களால் முடிஞ்சது இவ்வளவுதான்...

பெரிய உயிரைக் காப்பாத்திட்டோம்... குழந்தையைக் காப்பாத்த முடியலே... patientஐ யாரும் disturb பண்ணவேண்டாம்... மயக்கமா இருக்காங்க... கொஞ்ச நேரங்கழிச்சு போய்ப்பாக்கலாம்... நான் வரேன்...

சோமு : மாரியாத்தா இந்தமுட்டுமாவது கருணை காட்டினயே... தம்பி, தம்பி, மனசைத் தேத்திக்கப்பா, பெரிய டாக்டர் சொன்னதைக் கேட்டயில்லே... ஏதோ இந்த முட்டுமாவது ஒம்பொஞ்சாதி உசிர் பொளச்சுதே...

* * *

கோபால் : ராதே... ராதே... ஏ புள்ளே... என்னைப்பாரு... நான்தான் கோபாலு... தெரியலே...

ராதே : (தெளிவில்லாமல்) யாரு... நீங்களா... வாங்க... புள்ளெயை பாத்தீங்களா... எம்மவன் எவ்வளவு அளகா இருக்கான் பாத்தீங்களா...

கோபாலு : இதபாருபுள்ளே... நமக்கு அதிஸ்டம் இல்லே... புள்ளே செத்துப் போயிடுச்சு... உனக்கு டாக்டரு சொல்லலை...

ராதே : சொன்னுங்களே... அதனுல் என்ன... எம்மவனை சீக்கிரம் எடுத்து எங்கிட்ட கொடுங்க... அவனுக்குப்பால் கொடுக்கணும்... உம் சீக்கிரம்... ஏன் நிக்கறீங்க...

கோபால் : என்னபுள்ளே... ஏதாவது பைத்யம் புடிச்சிடுச்சா...

ராதே : எனக்கொண்ணும் பைத்தியம் இல்லே... புள்ளெயே எடுத்து வெக்கல் துணியெல்லாம் அடச்சுக் குடுங்க... பால் குடுக்கணும்... ஏன் முழிக்கிறீங்க... மனுசம் பெத்தா புள்ளே... மாடுபெத்தா கன்னுகுட்டி ... மாடுபெத்ததை கொன்னு வெக்கலை அடைச்சு நிறுத்திஞ மாடுபால் குடுக்கலே... அதுமாதிரி நான் பெத்ததை எங்கிட்ட குடுங்க... நல்ல வேலை நீங்க கொல்லவேண்டாம்... அதுவே செத்திடுச்சு... வைக்க மட்டுந்தான் பாக்கி... சும்மா நிக்காதீங்க போங்க... (அழுகிருள்) (பிறகு சிரிக்கிருள்)

கோபால் : ராதே... புரிஞ்சுடுச்சு... நீ அந்த கெட்ட பழக்கத்தை விட்டுடு விட்டுடுன்னு சொன்னதைக் கேக்காததுக்கு தண்டனை கெடச்சிடுச்சு... புள்ளே இப்ப சிரிச்சது நீ இல்லே மாரியாத்தா... எனக்கு நல்லாப் புரியுது, மனுசனுக்கு சொன்னுத் தெரியாது. பட்டாத்தான் தெரியுங்கறதை மாரியாத்தா நல்லா உணர்த்திட்டா... புள்ளே... இதப்பாரு இனிமே அந்த பளக்கத்தைவுட்டுடறேன். இதுசத்யம்..

*வீடு*

ராதை : என்னங்க... ஏன் இப்படி தூக்கத்தில உளர்றீங்க? வெளக்கு வெக்கப் போவுது... இன்னும் தூங்கிகிட்டு...

கோபால் : உம்... என்ன? தூங்கிட்டேனு ... ராதே ஒனக்கு உடம்பு தேவலையா

ராதை : என்ன இது நான் நல்லாத்தானே இருக்கேன்.

கோபால் : கொளந்தே... ?

ராதே : கூடிய சீக்கிரம் பொறக்கும்... ஏன் ?

கோபால் : ஒண்ணுமில்லே இதப்பாரு புள்ளே... இன்னியிலேருந்து நீ சொன்னபடி அந்தக் கெட்டபழக்கத்தை வுட்டுடறேன்... இது நமக்குப் பொறக்கப்போற புள்ளே ஆணையா சத்யம்..

ராதே : (வியப்பும், மகிழ்ச்சியும் பொங்க) என்னுங்க இது? நான் ஏதாவது கெனுக்கண்டுகிட்டிருக்கேனு? ஏன் இப்படி மாறிட்டீங்க... தூக்கம் கலையலையா ?

கோபால் : தூக்கம் கலைஞ்சு நல்லா விழிச்சுகிட்டேன்... நான் சொல்றது உண்மை ... விவரம் அப்புறம் சொல்றேன்...

ராதே : மாரியாத்தா... எல்லாம் உன் மகிமை.

கோபால் : ஆமாம் .. அவமகிமைதான் ●

*Tamil Novel* :
**M. V. VENKATRAM**
*Translated By* :
**K. G. S.**

# NECTAR – 3.

That a gentleman named Sadasivam gave some medicine to a dying girl and by God's grace she recovered, may be quite an ordinary thing; it is also quite natural for me to feel a profound sense of gratitude towards him for saving my wife's life; it isn't surprising either that being a man of means, he refused to accept any reward for his help.

But I was surpised only at the fact that he did not reveal his identity to me, even though he knew all about me and mine. His appearance; his words and the cloak of mystery with which he deliberately covered himself, made him an obsession with me. I described him to Rani in glowing terms.

Looking at my darling slumbering beautifully by my side, I thought gratefully of the man who had saved her for me; and lulled by her gentle snoring, I too slipped unconsciously into a deep sleep.



In the last quarter of the night, just before dawn, my consciousness began to move about in a strange kind of dream.

Clearly and realistically, and with an unforgettable intensity, came the dream.

The hall of a house which I had never seen before.

Sadasivam is chewing betel leaves, sitting in a chair. Holding the back of an arm-chair in front of him, I am standing respectfully before him. I am saying; "Father, if you want me to be happy, please do not make any objection to this marriage. I have promised Meena I will marry her... Father, Without Meena my life cannot be happy."

'Only if you marry her, your life will be unhappy'.

'Father! Your words break my heart; why is it that you object to Meena?'

'You will be sorry if I tell you why.'

'Shouldn't I know your reason?', I counter.

'All right then; I do not trust her. She will not make you a good wife. She cannot be faithful to her wedded husband'.

'Father!', I shout, trying to keep my voice respectful even then, 'You have not understood her properly'.

'Really!', says he and laughs at me.

The dream prolongs; but the scene changes.

A mango tree beside a road somewhere. At its foot, on the ground, I am sitting like the hero in a cheap film, my

head supported by my left hand. In front of me stands a girl; a beautiful girl with prominent features and a youthful figure.

I address her in moving tones; "Meena, my father has so for never done anything to hurt me. Somehow, in this matter of my marriage alone, he is so difficult .. "

'Is it your father that is going to marry or you?', she asks me angrily.

Wordlessly and miserably I stand looking at her.

'I have waited for you long enough. I can't wait any more. Before morning, you must make your choice-between your father and me.' She gives me her ultimatum.

'Meena! What can I do if you also are obstinate like my father? Wait for some more time, my dear. My father's mind may change and he may yet permit us to marry'.

'Wait still further? I cannot wait till I become old. You can marry your father for all I care', says she in a huff and turning her back to me, she hastens away from me. I watch fascinated her retreating back, as her voluptuous figure moves along with a serpent's sinuous grace. — A king-cobra rustling along, twisting and twining its supple body, could hardly have been more enthralling than she, as she hurried along, never once turning back to look at me... "Meena! Meena!" — my voice falls on deaf ears.....

Yet another scene, as the dream continues:

Sadasivam is sitting in the same chair in the same hall in the same house. Holding the back of a chair as before, I am standing with bowed head in front of him.

Sadasivam is speaking: 'I am sorry I have wounded your heart needlessly, my boy! I have come to a decision about you and Meena; I now withdraw my objection to your marrying her since you so earnestly desire it'.

'Please don't make fun of me, father', I say without lifting my bowed head.

'I am not joking, my son. Truly, without her your heart will break. You are my only son How can I see you heart-broken?'.

'Please father! Spare me, please! I don't want Meena... Never. Not for a hundred births'.

'Why? What is the matter now? When I have changed my mind, you too have changed yours! What's wrong?', he queries.

'The whole town is laughing at it. You speak as if you don't know anything.'

'What about? Tell me, son.'

'She who offered to give me her own life, has eloped with some one. It's the talk of the town. You really don't know?'.

'So what I feared ... '

'Has come true.'

'Thank God you are saved. Don't worry, my boy; I shall get you a better girl'.

The dream ended at this stage. But long after it vanished, its illusion remained with me. Even when I woke up from sleeep in the morning it was vividly present in my memory. The more I thought about it, the more I wanted to recollect it.

A writer knows the usefulness of dream-sequences, I too have introduced any number of them in my stories. Dreams come to the rescue of the writer very often. What can be the meaning of the dream I had? Do dreams have any significance at all?

Indigestion is said to bring about dreams and nightmares. Maybe so; But I had not taken anything heavy or indigestible at supper. If you go on thinking about the same thing, you get it in dreams they say. Perhaps it is so. As I had been thinking only about Sadasivam, his figure might have come in a dream. But then, why did I call him as my father in the dream? And who was that bold girl whom I loved? I have not seen her till now. What could be the significance of the dream having as its subject, jilted love, with a warning father and an embarassed son as the main actors?

I could not dismiss it so lightly, as a mere dream which need have no significance at all. Life itself is a dream, they say. This was a dream within a dream. If the dream of life is conditioned by the cause-effect chain-reaction, this dream within a dream of life, should also be subject to the same explanation.

I spoke of it to Rani. She was more puzzled than I. But she teased me about it at first. 'Why, you are able to get a story even in a dream! Anyhow, I think it is better you meet Sri Sadasivam. Something in my mind tells me that he will be able to interpret it correctly'.

'It is not a mere something in the mind, in my case, that tells me so. My entire being is saying the same thing' I said.

I could not keep indoors after that. Yesterday I had been to him to find out who he was. Today, I went in search of him, to get at the meaning of a dream.

When something puzzling occurs, can you attend to anything else till you unravel it to your satisfaction?

*[ To be Continued ]*

---

தேவதரிசனம் :

## மரணம்

பெரிய துன்பம் = மரணம் என்று எண்ணுகிறோம். ஆனால் இறந்து போகிறவனுக்கு சாவு ஒரு நோவு அன்று.

மரணம் சம்பவிக்கின்ற நிலை இன்பநிலையே.

உயிர் பிரிவது இன்ப காரியம் என்ற தைரியம் நம்மை இன்புறுத்தும்.

அர்த்தமுள்ள வாழ்வில் மரணத்திற்கும் அர்த்தமுண்டு என்பதை அறிந்தால் எஞ்சுவது மகிழ்ச்சி.

# சூரியமூர்த்தி

— திருலோகசீதாராம்

– எழுதரிய வண்ணம், அவை
எண்ணரிய வாகும்
தொழுதுவல மாகிவரு
கோடிபல கோளம்

- முழுதுமொளி தடவிபுவி
மொய்த்துவரு கின்றாய்
கெழுதகைய வன்பினொடு
கேண்மை கொள வென்றா?

- நிழல் ஒளிகள் என்றவிரு
நெடியகடி வாளம்
அழலுமிழ வாம் பரி
யதிர்ந்த துகள் இந்தப்

– பழையவுல கிற்புதிய
பகலிரவு தூவி
விழுதுக விழுந்திசை
விளக்கமுறல் என்னே!

- கண்ணொளி மடங்கியெழு
காட்சி நிலை யானாய்
விண்ணொளி விளைத்த புகழ்
விஞ்சுமொரு நெஞ்சத்(து)

- எண்ணிய வெழிற் சிலையில்
எங்கள்குடி யானாய்
மண்ணக விருள் கெட
மணந்த மணவாளா!

# Soorya Moorthy

T. N. Ramachandran

- Ineffable and innumerable
Are the orbs that pirouette
In worshipful gyration;

- Flooding them with delight
Thou visitest the Earth
To stablish friendly love.

- Light and murk are the twin reins
Of the fiery steeds
Which gambado shaking dust

- That falls on this old Earth
As Day and Night anew
In harmonious brilliance ever more.

– Thou art beyond mortal ken
Full of flame and heavenly fame
Surcharging thy bosom stout

– Chaser of darkness, it hath pleased thee
To abide in the icon wrought
by our thought
O Grand Spouse to the great Earth.



# மார்கரட். இ. கஸின்ஸ் அம்மையார்

— கோவை அ. அய்யாமுத்து

பிரிட்டிஷ் ஆட்சியின் பிடியில் பாரதம் சிக்கித்தவித்திருந்த காலத்தில், பாரத மக்களின் சேவையில் பேரார்வங் கொண்டு பாரதத்துக்கு வந்து, பாரதத்தையே தங்கள் தாயகமாகப் பாவித்துச் சேவை புரிந்து உயிர் நீத்த மேனாட்டுப் பெண்களும் ஆண்களும் பல்லோராவர்.

அவர்கள் சமயத்துறையிலும், கல்வித் துறையிலும், அரசியல் துறையிலும், ஜீவ காருண்யம் நிறைந்த மருத்துவத் துறையிலும் கடினமாக உழைத்து உயர்ந்தவர்கள்.

அத் திருக்கூட்டத்திலே மிஸஸ். மார்கரட் இ. கஸின்ஸ் அம்மையாரும் ஒருவர். அவரும் அவரது கணவரும் கிரேட்பிரிட்டனிலிருந்து இந்நாட்டுக்கு வந்தவர்கள். அன்னிபெசண்ட் அம்மையாரின் தியாசபிகல் இயக்கம் அத்தம்பதிகளை சென்னைக்கு ஈர்த்தது.

அம்மையாரோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு என் மனைவி கோவிந்தம்மாளுக்கும், எனக்கும் கிடைத்தது.

அம்மையாரும், கோவிந்தம்மாளும் வேலூர் சிறைச்சாலையினுள் அரசியல் கைதிகளாக இருந்தனர்.

கஸின்ஸ் அம்மையார் சிறையினின்று வெளிவந்தபின் கதர் பிரசாரத்தில் மிகத் தீவிரமாக ஈடுபட்டிருந்தார்.

கோத்தகிரியில அவர் வசித்திருந்த போது, அங்கு ராட்டினங்கள் கொடுத்து நூல் நூற்கச்செய்ய பெருமுயற்சி செய்தார். திருப்பூரிலிருந்து, கைராட்டைகளும், பட்டைப் பஞ்சும், பயிற்சிபெற்ற ஒரு தொண்டரையும் அம்மையாரின் வேண்டுகோளின்பேரில் அனுப்பிவைத்தேன்.

அச்சிட்ட கதர்த் துணிகளில் சட்டை தைத்து அணிந்து கொள்வதில் அம்மையார் பெருமிதங்கொண்டார்.

திருப்பூர் வஸ்திராலயத்திற்குப் பன்முறை வந்திருந்தார். காந்திநகருக்கு வந்து எங்கள்விருந்தாளியாகவும்தங்கியிருந்தார்.

அவருடைய விருப்பப்படி திருப்பூர் ஜெலெட்சுமி தியேட்டரில் 17-10-'39ல் ஒரு தமிழ்நாடு பெண்கள் மகாநாடு நடைபெற ஏற்பாடுகள் செய்துகொடுத்தேன். திருப்பூர் நகரப் பெண்களும், சுற்றுப்புற கிராமங்களிலிருந்தும் நூல் நூற்கும் மாதர்களும் பெருமளவில் வந்து கூடினர். பத்மாவதி ஆஷர் அம்மையார் தலைமையில் மகாநாடு வெற்றிகரமாக நடைபெற்றது. கஸின்ஸ் அம்மையும், சென்னை கோகுல ஹரிஜன் காலனி நிர்வாகி ஸ்ரீமதி. விசாலாட்சியும், கோயமுத்தூரிலிருந்து ஸ்ரீமதி. செங்கோடய்யன் முதலான பெண்களும், மகாநாட்டின் நடவடிக்கைகளில் கலந்து கொண்டனர்.

திருப்பூரையடுத்த அவனசிலிங்கம் பாளையம் எனும் கிராமத்திற்கு கஸின்ஸ் அம்மையாரை அழைத்துச் சென்றிருந்தேன். நூற்கும் பெண்மணிகள் நூற்றுக் கணக்கில் சூழ்ந்துகொண்டு அவரை வரவேற்று உபசரித்தார்கள்.

அம்மையார் ஒவ்வொரு வீடாக ஒவ்வொரு குடிலாக எட்டியெட்டிப் பார்த்து, அங்கிருந்த குழந்தைகளுடன் குலாவினர்.

எல்லோருடனும் நின்று படம் பிடித்துக்கொண்டார்.

கோத்தக்கிரியிலிருந்து அவர் எனக்கெழுதிய 27—1—40 தேதி கடிதத்தில் :

...... நல்ல அழகான போட்டோக்கள் எனக்கு அனுப்பியதற்தாக வந்தனம். மேனுட்டிற்கு நான் எழுதிய கடிதங்களு டன் அவற்றை வைத்து அனுப்புவதற்குத் தக்க சமயத்தில் அவை வந்து சேர்ந்தன. நீங்கள் நல்ல சுகத்தோடிருப்பதறிய மகிழ்ச்சியடைகிறேன். தங்கள் மனைவி யாருக்கு எனதன்பைத் தெரிவியுங்கள். ...

அம்மையார் சென்னைக்குச் சென்ற போதெல்லாம், பிற பெண்களையும் சேர்த் துக்கொண்டு, வீடு வீடாகச் சென்று கதர் விற்பதில் உற்சாகங் கொண்டார்.

சென்னை ராயபேட்டை காங்கிரஸ் மாளிகையில் நடந்துகொண்டிருந்த கதர்ப் பொருட்காட்சி தீக்கிரையான செய்தி கேட்டு அம்மையார் நெஞ்சுருக எனக் கெழுதிய கடிதம் காண்க.

காட்வியு.
கோத்தகிரி-8—1—1940

எனதன்புள்ள நண்பரே!

பொருட்காட்சி தீக்கிரையானதால் துன்பத்தில ஆழ்ந்திருக்கும் தங்களையும், தங்கள் ஊழியர்களையும் எண்ணும்போது என்நெஞ்சம் புண்ணுகிறது.

தீயினல் எல்லோரும் பலத்த அடி யுண்டார்கள்.

தீப்பிடிப்பதற்கு முந்தியதினம்தான் நான் பொருட்காட்சியைச் சுற்றிப் பார்த் தேன்.

கதர் மண்டபத்திலிருந்த பார்வையா ளர் புத்தகத்தில் நான் எழுதிவிட்டு வந்த புகழுரைகளைப் படித்தீர்களா? அந்தப் புத்தகமும் வெந்துசாம்பலாகிப்போயிற்ரு?

தங்களுக்கு ஏற்பட்ட நஷ்டம் எத்தனை?

மோதிரச் சால்வையும், கிருஷ்ண விக்ரஹமும் மீட்கப்பட்டதாகப் பத்திரிகை யில் படித்தேன். கெஜம் நான்கு ரூபாய்க்கு விற்கப்பட்ட கதர் மஸ்லினும் எரிந்து போயிற்ரு?

கருஞ்சிவப்பு நிறமுள்ள ஒரு ஹோல் டால் விளக்கு வாங்கிவந்தேன். அதைக் காணும்போதெல்லாம் அந்த துக்ககரமான சம்பவம் என் நினைவுக்கு வந்துகொண்டே யிருக்கும்.

நிவாரண நிதிக்குப் பத்து ரூபாய் மிஸ்டர் சத்தியமூர்த்திக்கு அனுப்பிவைத் தேன். அதைப்போல் நூறு மடங்கு அதிக மாக அனுப்பவே விரும்பினேன்...........

தங்கள் மனைவிக்கு என் அன்பு. கோவை மகாநாட்டிற்குத் தாங்கள் பிரதி நிதிகள் அனுப்பி வைத்ததற்கும், திருமதி, பத்மாவதி ஆஷருக்கும் என் நன்றி.

தங்களன்புள்ள,
மார்கரெட் இ. கஸின்ஸ்.

மற்றுமோர் கடிதம்

அம்மையாரின் அளவுகடந்த அன் பைச் சித்தரிக்கும் மற்ரெரு கடிதத்தையும் உவப்புடன் வெளியிடுகிறேன்.

கோத்தகிரி
5—5—40

அன்பர் திரு. அய்யாமுத்து,

தேசீய வாரத்தில், தமிழ்நாட்டில், 55,000 ரூபாயுக்கு கதர் விற்பனையாயிற்று என்ற செய்தியை "ஹிந்து" பத்திரிகை யில் பார்த்து மிக்க சந்தோஷமடைந்து எனது பாராட்டுதலை உங்கட்குத் தெரிவிக் கும் பொருட்டு இக்கடிதமெழுதுகிறேன். சிறப்பான செய்தி. வருகிற வாரங்களில் கதர் விற்பனை பெருகுமாக.

பொருட்காட்சி நிவாரண நிதிக்கு பணம் வசூலாகி வருவதைக் காண்கி றேன்............

தங்கள் உதகை வஸ்திராலயத்தை அடிக்கடி போய்ப் பார்த்து மகிழ்சியடை கிறேன்.

தாங்கள் அண்மையில் வட இந்தியா சென்றிருந்தபோது, அங்கிருந்து நவ நவ

மான கதர் கொண்டுவந்திருப்பீர்களென்று நம்புகிறேன்.

ஊட்டிக்கு நீங்கள் வரும்போது என்னை அவசியம்வந்து பார்க்கவேண்டும். தொட்டபெட்டா பஸ்ஸில் ஏறினல் ஒரு மணி நேரத்தில் நீங்கள் எனது ஜாகைக்கு வந்து சேரமுடியும்.

தங்களை இங்கு ஒரு இரவு தங்கச் செய்வதற்கு எனக்கு சுலபமாகவே இருக்கும்.

என் அருகாமையிலுள்ள அரவனில் நூற்பு வகுப்புகள் ஆரம்பிக்க வேண்டுமென்று நான் மெத்த ஆசையுடன் இருக்கிறேன்.........

தங்கள் உடல்நலம் நன்ருயிருக்கிறதென்று நினைக்கிறேன். தங்கள் மனைவிக்கு என் அன்பு.

தங்களன்புள்ள,
மார்கரட் இ. கஸின்ஸ்.

இத்தகைய அன்புள்ளங்களொடு உறவு கொள மனிதன் எத்தனை பேறுபெற்றிருக்க வேண்டும்.

கஸின்ஸ் அம்மையார் பச்சை வாதத்தால் பீடிக்கப்பட்டு, பெங்களூரில், இவ்வுலக வாழ்வைநீத்து, இறைவனடி சேர்ந்தார். வாழ்க அவர் நாமம்.

அவரும் அவரது கணவரும் சேர்ந்து WE TWO என்ருெரு நூல் எழுதியுள்ளனர். இவர்களைப்பற்றிய ஒரு அரிய விசேடம் என்னவென்ருல், அவர்கள் சரீர உறவு கொள்ளாத தம்பதிகள்.

## டாக்டர் ப. சுப்பராயன்

காலஞ்சென்ற டாக்டர் ப. சுப்பராயன் அவர்கள் எனது சாதிக்காரர்.

அவர் அந்தக்காலத்தில் பிராமண வகுப்பைச் சேர்ந்த ராதாபாய் அவர்களைக் காதலித்துத் துணிந்து மணந்துகொண்டவர்.

அவரும், அவரது வாழ்க்கைத்துணைவியார் ராதாபாய் அம்மாள் அவர்களும் என்னிடம் மிக்க வாஞ்சை கொண்டிருந்தனர்.

டாக்டர் சுப்பராயன் அவர்கள் ஒரு SPORTS MAN. விளையாட்டு வீரருக்குள்ள அருங் குணங்களெல்லாம் அவரிடம் குடிகொண்டிருந்தன.

அவர் ஒரு GENTLE MAN. கனவான்களுக்குள்ள அருங்குணங்கள் யாவும் அவரிடம் மிகுந்திருந்தன.

அவர் ஒழுக்கமுள்ளவர், பக்தியுள்ளவர், நேர்மையானவர், பழகுவதற்குத் தங்கமானவர்.

அவருடைய மனைவி மக்களிடம் அவருக்கிருந்த பிரியத்தை அளவிட்டுச் சொல்ல முடியாது.

அவருடைய மூத்தமகன் பரமசிவம் குமாரமங்கலம், கடந்த மகாயுத்தத்தின் போது எகிப்து நாட்டில் யுத்தக் கைதியானுர். அவரை நினைந்து நினைந்து டாக்டர் கண்ணீர் உகுக்கக் கண்டேன். இந்த மகன்தான் இந்தியாவின் முப்படைகளின் கௌரவம்மிக்க தளபதியாகவிருந்து சமீபத்தில் ரிடையர் ஆனவர்.

இப்போது மத்திய அரசிலே மந்திரியாக இருக்கும் பாரிஸ்டர் மோகன் குமாரமங்கலமும்: டாக்டர் சுப்பராயனின் அருமந்தப் புதல்வர் ஆவார்.

கம்யூனிஸ்ட் கட்சியின் பார்லிமெண்ட் அங்கத்தினராகக் கோவைத் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பார்வதி [கிருஷ்ணன்] டாக்டர் சுப்பராயனின் அன்பு மகளாகும்.

டாக்டர் சுப்பராயன் டாக்டர் அல்ல. அது அவர்பெற்ற கௌரவப்பட்டம். அவர் இங்கிலாந்தில் பயின்ற பாரிஸ்டர். அவரது மனைவி - மக்கள் - எல்லாரும் இங்கிலாந்தில் பயின்றவர்கள். சாதியின் எல்லையைக் கடந்தவர்கள்.

சேலம் ஜில்லாவில், குமாரமங்கலம் என்ற ஊரின் ஜமீன்தாராக இருந்தவர் டாக்டர் சுப்பராயன்.

ஜமீன்தாரர் பட்டங்களெல்லாம் காற்ருடிப்பட்டங்களான பின்னரும், இவரது மக்கள் இருவரும் தங்கள் பெயருடன் குமாரமங்கலத்தைச் சூடிக்கொண்டிருப்பது, இக்காலத்துக்குப் பொருந்துவதாயில்லை.

டாக்டர் சுப்பராயன் அவர்களை எனக்கு 1923ம் ஆண்டு முதற்கொண்டே தெரியும். அவருக்கும் அப்போதிருந்தே என்னைத் தெரியும்.

டாக்டர் சுப்பராயன் எங்கள் சாதியின் எல்லையைக் கடந்துவிட்டபோதிலும் நாங்கள் அவரைச் சாதிப்பிரஷ்டம் செய்யவில்லை. எங்களது கொங்கு வேளாளர் மகாநாடுகளுக்கு நாங்கள் அவரை 1923ம் ஆண்டு அழைத்தோம். அதற்குப் பிறகு பலவாண்டுகள் நடந்த மகாநாடுகளுக்கும் அழைத்தோம். நாங்கள் அழைத்த போதெல்லாம் அவர் வந்தார். மகாநாட்டின் நடவடிக்கைகளில் ஆர்வமுடன் கலந்துகொண்டார். காடுமுடியில் நடந்த எங்கள் மகாநாட்டிற்கு அவர்தான் தலைவராயிருந்தார் என்ற ஞாபகம்.

டாக்டர் சுப்பராயனின் மாமனூர் ரங்கராவ் என்பவர் மங்களூர் சரஸ்வதி பிராமணர். அவர் பிரமோ சமாஜத்தைச் சேர்ந்து எழுபதாண்டுகளுக்கு முன்னரே, தீண்டாமை விலக்கு, விதவா விவாகம் முதலிய சமூக சீர்திருத்தங்களில ஈடுபட்டிருந்ததால் அவருடைய சமூகத்தாரால் சாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டிருந்தவர்.

1924-25ம் ஆண்டுகளில் நான் புதுப்பாளையம் — காந்தி ஆசிரமத்தில் — இருந்தபோது டாக்டர் சுப்பராயனை அடிக்கடி சந்திக்கும் வாய்ப்பு இருந்தது.

புதுப்பாளையம் மிட்டாதார் — காந்தி ஆசிரமத்தை உண்டாக்கியவர் — P. K. ரத்தினசபாபதிக் கவுண்டர் டாக்டர் சுப்பராயனுக்கு நெருங்கிய சொந்தக்காரர்.

டாக்டர் சுப்பராயனுக்கும் ராஜாஜிக்கும் நெருங்கிய தொடர்புண்டு. பந்தபாசமுண்டு. குமாரமங்கலம் ஜமீனுக்கு ராஜாஜியின் அண்ணன்தான் மானேஜராக இருந்தார்.

புதுப்பாளையம் குடும்பத்துக்கும் ராஜாஜிக்கும் நெருங்கிய நட்பு உண்டு. அதனுல்தான் அவருக்குப் புதுப்பாளையத்தில் காந்தி ஆசிரமம் நிறுவப்பட்டது.

டாக்டர் சுப்பராயன் தலைமையின்கீழ் ஒரு சுயேச்சை மந்திரிசபை சென்னை மாகாணத்தில் நிறுவப்பட்டது.

அதன்பின்னர் காங்கிரஸ் ஆட்சியிலும் சுப்பராயன் மந்திரியாக இருந்தார்.

இந்தோனேசியாவில் நமது தூதுவராகவும் இருந்தார்.

இறுதியில் மகாராஷ்டிர கவர்னராகவும் இருந்தார்.

ராஜாஜி சிறைப்பட்டிருந்தபோது புதுப்பாளையம் காந்தி ஆஸ்ரமத்தையும் பொறுப்புடன் கவனித்திருந்தார்.

டாக்டர் சுப்பராயன் தம்பதிகளுடன் நான் அநேக அகில இந்திய காங்கிரஸ் கூட்டங்களுக்குப் பிரயாணம் செய்திருக்கிறேன்.

அவர்கள் இருவரையும் எனது காமிராவுக்குள் பிடித்து வைத்திருக்கிறேன். அவர்கள் எனக்கு அத்யந்த நண்பர்களாக இருந்தார்கள்.

எனது சக ஊழியர்கள் சிலர் - சிலரென்ன பலர் - மந்திரிகளாகியிருக்கின்றனர். எனது பெட்டியைத் தூக்கிக்கொண்டு என்னுடன் நடைபோட்டவர்களும், எனக்கு ஹோட்டலிலிருந்து டிபன் காரியர்களில் சாப்பாடு சுமந்து வந்து கொடுத்தவர்களும், என்னிடம் ஐந்து பத்து கைநீட்டி வாங்கியவர்களும், என்னிடம் பழைய வேட்டி சட்டைகளை

வாங்கி உடுத்தியவர்களும்கூட மந்திரிகளாகும் பாக்கியம் பெற்றிருந்தனர்.

அவர்களிற் சிலர் - ஆமாம்-எல்லாரும் அல்ல - மந்திரிகளான பின்னர், அவர்களுடைய பார்வை, தோரணை, நடத்தை, எண்ணம் ஆகியவற்றில் பெருத்த மாறுதல் கண்டேன். அவர்களைக் கண்டால் நாம் அவர்களைக் கும்பிடவேண்டும் என்று எதிர்பார்த்தார்கள். மந்திரிபதவி போன பின் சீந்துவாரின்றித் தெருக்களில் அவர்கள் திரிந்ததையும் நான் பார்த்திருக்கிறேன்.

டாக்டர் சுப்பராயன் பரம்பரைச் செல்வந்தர். யார் தயவையும் நாடவேண்டிய அவசியம் இல்லாதிருந்தவர். மந்திரிபதவி வகிக்க எல்லா விதத்திலும் தகுதி வாய்ந்தவர்.

அவர் மந்திரியாய் இருந்த காலத்திலும், இல்லாதிருந்த காலத்திலும், தமது நண்பர்களைக் கண்டால், அவரே நின்று முகமலர்ந்து யோக க்ஷேமம் விசாரிக்கத் தவறியதில்லை. குட்டிப் பயல்களுக்கெல்லாம் தமது பாக்கட்டிலிருந்து சிகரெட் எடுத்துக் கொடுப்பார். அவரே தீக்குச்சியைக் கொளுத்திப் பற்றவும் வைப்பார்.

யாரையும் அவன் இவன் என்று குறிப்பிட மாட்டார். எல்லோரையும் மிக்க மரியாதையுடன் அவர் இவர் என்றே குறிப்பிடுவார்.

அவர் தம் உள்ளத்திலே கள்ளங் கபடம் ஒரு சிறிதும் இல்லாதிருந்தார்.

## மந்திரிகளும் நானும்

மந்திரிகளைக் கண்டால் நான் நின்று பேசமாட்டேன். எனக்கொன்றும் "காம்ப்ளக்ஸ்" இல்லை. அவர்களிடம் எனக்கு யாதொரு வேலையும் இல்லாதிருக்கும் போது எதற்காகப் பேசவேண்டும் என்று எண்ணுவேன். அவர்களுடன் பேச ஆரம்பித்தால், தங்களிடம் ஏதாவது கேட்க வந்துவிட்டானே வென்று எண்ணவுங் கூடும். மந்திரிகளிடம் போக்கு வரத்து வைத்துக்கொண்டிருந்தால் பொதுஜனங்களும் நம்மை சும்மாவிடமாட்டார்கள். ஏன் அதிகாரிகளும் நம்மிடம் வர ஆரம்பித்து விடுவார்கள். இதனால் நான் மந்திரிகளைக் கண்டால், ஒதுங்கியே போய்விடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்.

ஒருமுறை நான் சென்னை செகரியட்டேரிக்குப் போயிருந்தேன். யாரையோ பார்க்கப் போகும்போது நான் டாக்டர் சுப்பராயன் அறைக்குள் புகவேண்டியதாயிற்று. எனினும் அவரைத் தலைநிமிர்ந்து பார்க்காமலே சமாளித்துக்கொண்டு அவருடைய பார்வையிலிருந்து தப்பித்துக் கொண்டேன்.

இரண்டு நாட்கள் கழித்து நான் திருப்பூர் திரும்பியதும் டாக்டருடைய கடிதம் என் வருகைக்காகக் காத்திருந்தது. நீங்கள் சென்னைக்கு வந்திருந்தீர்களாமே என்னையேன் பார்க்கவில்லை? அடுத்த முறை வரும்போது அவசியம் பார்க்காமல் போகக் கூடாதென அதில் எழுதப்பட்டிருந்தது.

## ஜாகர்த்தா கடிதங்கள்

அவர் இந்தோனேசியாவில் நமது தூதுவராய் இருந்தபோது எனக்கு இரண்டு கடிதங்கள் எழுதினர்.

இந்தியாவின் எம்பசி
ஜாகர்த்தா (இந்தோனேசியா)
2—8—1950

எனதன்புள்ள அய்யாமுத்து,

ஜூலை 27ல், நீங்கள் கோயமுத்தூரிலிருந்து எழுதிய அன்பான போஸ்ட்கார்டு கிடைத்தது. நீங்கள் என்மீது அன்பு கூர்ந்து எழுதியிருக்கிறீர்கள்.

ஆகஸ்டு 4ந்தேதி அம்மா இந்தியாவுக்குப் புறப்படுகிருர்.

நான் ஏதோ ஓய்வெடுத்துக் கொண்டிருப்பதாகத் தாங்கள் எண்ணுவதறிந்து

வருந்துகிறேன். என்னுடையதைப் போன்ற ஒரு புது எம்பசியில் ஓய்வு என்ற பேச்சுக்கே இடமில்லை.

ஆனால் நமது பிரதமர் இங்கு விஜயம் செய்ததால் என்வேலை எவ்வளவோ எளிதாகப் போயிற்று. அவருடைய வரவால் இரு நாடுகளுக்குமிடையே இருந்த உறவு பலப்பட்டுவிட்டது.

அவர் வருவதற்கு முன்பே, இந்தோனேசியாவின் சுதந்திரப் போராட்டத்தின் போது நமது பிரதமர் காட்டிய ஆதரவை நினைத்து, இந்நாட்டு மக்கள் நன்றியுடன் பேசிவந்தார்கள். இந்தோனேசியாவின் பிரஸிடெண்ட் நமது பிரதமரை தில்லியில் சந்தித்து, அவருடைய விருந்தாளியாக இருந்திருக்கிறார்.

1927ல் பிரசல்ஸ் என்னுமிடத்தில் நடைபெற்ற ஏகாதிபத்ய எதிர்ப்பு மகா நாட்டின்போதே டாக்டர் ஹாட்டாவும், அவரும் சந்தித்திருக்கிறார்கள்.

இந்தோனேசியாவின் விடுதலைக்கு உபகாரியாயிருந்தவர் என்று இங்குள்ள பத்திரிகைகளால் புகழ்ந்து எழுதிப் பாராட்டப்பட்டவரை இந்நாட்டு மக்கள் நேரிற் காணும் வாய்ப்பினைப் பெற்றார்கள்.

அவர் சென்றவிடமெங்கும் ஏராளமான மக்கள் கூடினார்கள். அவரைத் தங்களில்ஒருவராகவே அவர்கள்கருதினார்கள்.

அவரை வரவேற்பதற்காக நாட்டப்பட்ட வளைவு தோரணங்களில் :

பா நேரு
பங் நேரு

என்று எழுதியிருந்தார்கள். பிரசிடெண்ட் சுகர்ணவை இந்நாட்டு மக்கள் 'பங்' என்று செல்லமாகக் குறிப்பிடுகிறார்கள்.

நமது பிரதமரை "பங் நேரு" என்று அழைத்ததிலிருந்து, இந்நாட்டு மக்கள் அவர்மீது எவ்வளவு அன்பு கொண்டுள்ளார்கள் என்பது விளங்குகிறது.

நமது நாட்டுடன் இந்த நாட்டிற்கு எட்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட கலாச்சாரத் தொடர்பு இன்றும் மங்காமல் இருந்து வருகிறது. இந்தியாவின்மீது, இத்தீவுகளில் வாழும் மக்கள் அபாரமான மதிப்பு வைத்திருக்கிறார்கள், இம்மக்கள் காட்டிய அன்பினால்நான் கவரப்பட்டேன். அவர்களில் பலர் எனது நண்பர்களாகி விட்டனர். இங்குள்ள வேலை எனக்கும் பிரியமாக இருக்கிறது.

......நான் 1934 ம் ஆண்டிலிருந்து அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் அங்கத்தினராக இருந்து வருகிறேன். அத்தொடர்பு அறுந்து போகாமலிருக்க நான் விரும்புகிறேன். ஆகஸ்டு 26ந்தேதி சென்னையில் நடைபெறும் கூட்டத்தில் உங்கள் முதல் வோட்டை எனக்குத்தந்து உதவுங்கள். காமராஜரும், நாடிமுத்துப் பிள்ளையும் எனக்கு உதவுவதாக வாக்களித்துள்ளார்கள்.

நீங்கள் உடல் நலத்தோடு இருப்பீர்களென்றும், உங்கள் வியாபாரம் நன்கு நடைபெற்றுவருகிறதென்றும்நம்புகிறேன்.

தங்களின் அன்புமிக்க,
ப. சுப்பராயன்.

இரண்டாவது கடிதம் 18—8—50

எனதன்புள்ள அய்யாமுத்து,

உங்கள் 10ம் தேதி கடிதம் கிடைத்தது. அம்மா சென்னையில், இராஜாஜி ஹாலுக்கு சமீபத்தில் "HUT" எனுமிடத்தில் தங்கியிருக்கிறார். அவருக்கு உடம்பு சிறிது குணமில்லை.

... ஆம். பாபு (மகாத்மா காந்தி) ஒரு அற்புதமான மனிதர். அவர் அநேக தலைவர்களை சிருஷ்டித்தார். ஆனால் நமது மகாணத் தலைவர்கள் எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனையே இல்லாமலிருப்பதால் நாம் இந்த அவதிக்குள்ளாகி இருக்கிறோம். எல்லாம் நன்மையாகத் தீரும் என்று நம்புகிறேன்.

அன்புள்ள,
ப. சுப்பராயன்.

### டாக்டரைக் கத்தியால் குத்த வந்தவன்

1949ம் ஆண்டில் டாக்டர் சுப்பராயனை எவனோ ஒரு பைத்தியக்காரன் கத்தியால் குத்த எத்தனித்தான் என்ற செய்தி கேட்டு அவருக்குக் கடிதமெழுதினேன்.

அவர் எழுதிய பதில் கடிதம்:

சேப்பாக்கம் வீடு
திருவல்லிக்கேணி 10—5—1949

நண்பர் அய்யாமுத்து அவர்களுக்கு
வணக்கம்.

தங்களது அன்பான கடிதம் கிடைத்து மகிழ்ந்தேன். தங்களது கவலை அன்பால் எழுந்தது. எனக்கு ஒன்றும் ஏற்படவில்லை. ராஜா கவுண்டருக்கு மனம் சரியாயில்லை யென்று நினைக்கிறேன்.

எந்த விஷயத்தினால் என்மேல் அவருக்கு கோபம் உண்டாயிற்று என்று எனக்கே தெரியவில்லை. ஆயினும் தாங்கள் சொல்லியபடி ஜாக்கிரதையாக இருப்பது நலம்.

ஆனால் நமது உயிர் நம் கையில் இருப்பதில்லை. எல்லாம் அவன் செயல். எதற்கும் முன்ஜாக்கிரதை நலம்.

தங்கள் அன்புக்கு யாது கைம்மாறு செய்ய என்னால் முடியும். கோயமுத்தூர் வந்தால் தங்களைப் பார்க்கிறேன்.

தங்களன்புள்
ப. சுப்பராயன்.

### கல்மாரி பெய்தது

1938 - ஏப்ரல் - 24ந்தேதி இரவு திருவாரூரிலே டாக்டர் சுப்பராயன் ஒரு பொதுக் கூட்டத்திலே பேசிக்கொண்டிருக்கையில் சில கற்கள் வந்து விழுந்தன என்றாலும் யார்மீதும் அடிபடவில்லை.

டாக்டர் யாதொரு பதற்றமும் இன்றித் தமது பேச்சை முடித்து உட்காருமுன்

"என்மீது கற்கள் வீசியது போதும். எனக்குப்பின்னால் என் தம்பி அய்யாமுத்து பேசுவார். அவர்மீது கற்களை எறியாதீர்கள்" என்றார்.

நான் பேச எழுந்ததும், கற்கள் வீச ஆசையுள்ளவர்கள் வீசிவிடுங்கள். அதற்கப்புறம் நான் பேசுகிறேன் என்று சொல்லிச் சில நிமிஷங்கள் காத்து நின்றேன். கற்கள் விழவில்லை. சுமார் அரைமணி நேரம் பேசிவிட்டு டாக்டரும் நானுமாகக் காரில் ஏறி அன்றிரவு கும்பகோணம் போய்ச் சேர்ந்தோம்.

அன்று காலையிலும், பகலிலும் நாங்கள் பூந்தோட்டத்திலும், நன்னிலத்திலும் இரண்டு மகாநாடுகளில் உறையாற்றினோம்.

### அம்மையாரின் பிரிவு

டாக்டர் சுப்பராயனின் ஆருயிர்க் காதலி ராதாபாய் அம்மையார் புதுதில்லியில் காலமானார். எனது அனுதாபக்கடிதத்தைப் பெற்றுக்கொண்டு டாக்டர் கீழ்க் கண்ட கடிதம் அனுப்பினார்.

4, ஹேஸ்டிங்ஸ் ரோடு
புதுடெல்லி, 2 ஜூலை 1960

அன்புள்ள ஐயா,

தங்கள் அனுதாபக்கடிதம் கிடைத்தது. மிக்க வந்தனம். தங்களின் ஆதரவான மொழிகள் பிரிவுத் துயரால் நொந்திருக்கும் எனக்கும் என் மக்களுக்கும் பெரும் ஆறுதலை அளிக்க வல்லதாக இருந்தது. பிரிவு என்பது ஆண்டவனின் கட்டளை. அதனை ஒவ்வொருவரும் ஏற்கத்தான் வேண்டியிருக்கிறது. ஆனால் பிரிவு இவ்வளவு சீக்கிரம் எதிர்பாராமல் நேரும் என்று நான் நினைக்கவேயில்லை.

தங்கள் அன்பான அனுதாபச் செய்திக்கு மீண்டும் என் வந்தனத்தை தெரிவித்துக்கொள்கிறேன்.

ப. சுப்பராயன்.

### டாக்டரின் மறைவு

மகாராஷ்டிர கவர்னர் — டாக்டர். ப. சுப்பராயன் அவர்கள் சென்னையில் 6—10—62 இறைவனடி எய்தினார்.

இந்தியா தன் தவப்புதல்வர் ஒருவரை இழந்தது.

நான் — என்னை அன்புடன் தம்பி என்றழைத்த உத்தமரை இழந்தேன்.

வாழ்க! அவர் நாமம்.

# தூயமலர்

*மூலம் :* கலீல் கிப்ரான் *மொழி பெயர்ப்பு :* வி. ஜி. சீனிவாசன்

அவனது சேனை அளவில் குறைந்தது. ஆதலால், இத்தகைய கட்டளை இடுவதைத் தவிர வேறு வழியில்லை தளபதிக்கு.

'உயிருக்கு சேதமேற்படாமலும், வெடி மருந்து பாழாகி விடாமலுமிருக்க நாம் ஒழுங்காகப் பின்வாங்கவேண்டும்; எதிரிக்குத் தெரியாத ஊருக்குச் சென்று அங்கு புதியதொரு தந்திரமான திட்டத்தை உருவாக்கவேண்டும். நாம் பாலை நிலத்தின் வழியே செல்லவேண்டும்; எதிரியிடம் பிடிபடுவதைக் காட்டிலும் அவ்வழி சிறந்ததுதான். செல்கின்ற வழியில் மடாலயங்களையும் கன்னி மாடங்களையும் தாண்டிச் செல்லலாம்; வேண்டுமானுல் ஆங்காங்கே உணவருந்தலாம், வேண்டிய பொருள்களும் கிடைக்கும்.'

படையினர் மறுக்கவில்லை. இக்கட்டான நிலை. வேறுவழியில்லை.

களைப்பு, வெயில், பசி, தாகம் இவற்றையெல்லாம் கஷ்டத்தோடு பொறுத்துக்கொண்டு பல நாட்களுக்குப் பாலை வழியே சென்றனர். ஒருநாள் கம்பீரமான கட்டிடம் ஒன்றைக் கண்டனர். அது பழங்காலக் கோட்டையைப் போன்றது. அதன் வாயிலும் மதில் சூழ்ந்த நகரமொன்றின் வாயில் போலத் தோன்றியது. அதனைக் கண்டதும் அவர்கட்கு மகிழ்ச்சியுண்டாயிற்று. அது ஒரு கன்னிமாடம் எனக் கருதினர். அங்கே தங்கி இளைப்பாறி உணவு கொள்ள முடியும்.

அவர்கள் கதவைத் திறந்தனர். ஆயின் அவர்களை எதிர்கொள எவரும் வரவில்லை. சிறிது நேரம் சென்றது. ஒரு அம்மையார் வந்தார். அவர் கருப்பு உடை தரித்திருந்தார். அவரது முகம் மட்டுமே தெரிந்தது.

'இந்த இடம் கன்னிய விடுதி. இதனை அவ்வாறே மதித்து ஒழுகவேண்டும் இங்குள்ள கன்னிப் பெண்களுக்கு எவ்விதத் தீங்கும் செய்யக் கூடாது,' என அந்த அம்மையார் விளக்கினுர் தளபதியிடம்.

'கன்னியரை நன்கு காப்பேன்; இது உறுதி; தயவு செய்து எமது படையினருக்கு உணவு வழங்குங்கள்; என்ருன் தளபதி.

கன்னிமாடத்தின் பரந்த தோட்டத்திலே படையினர்க்கெல்லாம் உணவு வழங்கப்பட்டது.

தளபதிக்கு நாற்பது வயதிருக்கும். கீழ்மை உடையவன், உறுதியான உள்ளம் இல்லாதவன். உடலிலே தினவெடுத்தது. காம வேட்கையைத் தணித்துக் கொள்ள பெண்ணொருத்தியே தேவை என எண்ணினுன். கன்னியொருத்தியை பலவந்தப்படுத்த முடிவு செய்தான். இடம் எப்படிப்பட்டது ? புனிதமானது! இறைவனோடு உள்ளத்தால் உறவாடி இடைவிடாத வழிபாட்டில் ஈடுபட்டுள்ள கன்னியர் வாழும் அகமல்லவா! பொய்யான, கெட்டுப்போன உலகின் சந்தடியிலிருந்து வெகு தொலைவில் விலகியிருந்த விடுதியல்லவா! அப்படிப்பட்ட புனிதமான இடத்தைக் களங்கப்படுத்தத் தூண்டியது தளபதியின் வஞ்சகக் காமவெறி.

'அம்மா அஞ்ச வேண்டாம். விபரீதம் எதுவும் நிகழ்ந்து விடாது,' எனமாடத் தலைவியிடம் திரும்பவும் உறுதிமொழி அளித்துவிட்டுத் துரோகத் தளபதி ஏணியேறிச் சென்ருன். வரிசையாக இருந்த அறைகளின் ஒன்றிலே கன்னியொருத்தி

இருந்தாள். அந்தக் கன்னியின் முகத்தை சாரளத்தின் வழியே ஏற்கெனவே கண்டிருந்தான் தளபதி. பல ஆண்டுகள் இடைவிடாத பிரார்த்தனை, தற்சுகம் பேணாத தன்மை, இவையெல்லாம் களங்கமற்ற கன்னி முகத்திலே படிந்திருந்த பெண்மையழகைச் சிறிதளவே பாதித்திருந்தன. அவள் இங்கே தஞ்சமெனப் புகுந்தவள். பாவம் நிறைந்த உலகிலிருந்து விலகி, உலகின் கவனத்திற்கு அப்பாற்பட்ட நிலையில் இறைவனை வழிபட எனவே வந்திருந்தவள்.

அறையினுள் நுழைந்ததும் பாவி வாளை உருவினான். 'உதவி கோரி கூச்சல் போட்டாயோ உன்னைக் கொன்று விடுவேன்,' என அச்சுறுத்தினான்.

அவள் புன்னகை பூத்துச் சும்மா இருந்தாள். அவள் நடந்துகொண்ட விதத்தைப் பார்த்தால் அவனது விருப்பத்துக்கு இணங்கிவிடுவாள்போல இருந்தது. பின்னர் அவனை ஏறிட்டுப் பார்த்து, 'உட்காருங்கள்; சற்றே இளைப்பாருங்கள். உங்களைப் பார்த்தால் மிகவும் களைத்துள்ளவர் போலத் தோன்றுகிறதே,' என்றாள்.

தனக்கு இரை சிக்கிவிட்டதென்ற எண்ணத்தோடு அவளை அருகி அமர்ந்தான் தளபதி. 'போராட்டத்திலே ஈடுபடுகின்ற உங்களைப் போன்ற ஆண்களைக் கண்டால் எனக்கு வியப்பாகவே உள்ளது. மரணத்தின் மடியிலே போய்ப் பாய்ந்து வீழ்கின்றீர்களே, உங்களுக்கு பயமாக இல்லையா?' என்றாள் கன்னி.

'சந்தர்ப்பமும் சூழ்நிலையும் எங்களைப் போராட்டத்திற்கு அனுப்புகின்றன. மக்கள் என்னை கோழை என்று சொல்லாமல் இருப்பார்களானால். இந்தச் சேனைக்கு தலைமை ஏற்க ஒப்புக்கொள்ளும் முன்பே எங்கேனும் ஓடிப்போயிருப்பேன்' என அந்த முட்டாள் கயவன் சொன்னான்.

'ஆனால் ஒன்று, இந்தப் புனிதமான இடத்தில் நாங்கள் ஒரு களிம்பு வைத்திருக்கிறோம் என்பது உங்களுக்குத் தெரியுமோ? அதை உடம்பிலே தடவிக் கொண்டால் எவ்வளவு பதமான வாளும் வெட்டமுடியாதபடி உடலைப் பாதுகாக்கும் என்பதை அறிவீர்களோ?' என்று அவனைப் பார்த்து புன்னகைத் தவழப் புகன்றாள் மங்கை.

'வியப்பாக உள்ளதே! எங்கே அந்தக் களிம்பு? நான் அதைப் பயன்படுத்துவதும் உறுதியே,' என்றான்.

'நல்லது அதிலே சிறிதளவு உங்களுக்குத் தருகிறேன்,' என்றாள் அம்மாது.

குருட்டுக் கொள்கைகளை மக்கள் நம்பி வந்த காலமது. தளபதியும் அக்காலத்திலே பிறந்தவன்தானே! புனித கன்னியைச் சந்தேகிக்கவில்லை.

அவள் ஒரு சாடியைத் திறந்து வெண்ணிறக் களிம்பைக் காட்டினாள். அதனைக் கண்டதும் ஐயம் கொள்ளத் தொடங்கினான் அவன். கொஞ்சம் களிம்பை எடுத்துத் தனது கழுத்திலே தடவிக் கொண்டாள். 'நீங்கள் என்னை நம்பவில்லையானால் அதனை மெய்பித்துக்காட்ட ஆயத்தம். உங்கள் வாளை எடுத்துக் கொள்ளுங்கள், பலம் கொண்டமட்டும் எனது கழுத்தை நோக்கி ஓங்கி வீசுங்கள், என்றாள்.

தளபதி தயங்கினான். 'வீசுங்கள் வாளை; தயக்கம் ஏன்? என திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டேயிருந்தாள், அதனாலே ஓங்கி வீசி விட்டான் வாளை.

அம்மகளின் தலை உடலிலிருந்து அறுந்து தரையில் வீழ்ந்தது. அசைவற்றுக் கிடந்தது. அதைக்கண்ட தளபதிக்கு மயக்கம்வரும் போலிருந்தது. தனது நிறைவுக்கு குறைவோ களங்கமோ ஏற்படாதிருக்க அந்தக் கன்னி கையாண்ட தந்திரம் அப்போதுதான் அவனுக்குப் புரிந்தது.

கன்னி இறந்து விட்டாள். தளபதியின் கண் முன்னே இருந்தவை இரு பொருள்

களே. கன்னியின் சவம் ஒன்று. களிம்புச் சாடி மற்ருென்று.

சாடியையும் சடலத்தையும் வெறித்துப் பார்த்தான் தளபதி. புத்தி மாருட்டம் கண்டது. கதவை திறந்துகொண்டு ஓடினுன்.

கையிலே ரத்தம் தோய்த்த வாளிருந்தது. தனது படையினரைப் பார்த்து, 'விரைக, விரைக நாம் இந்த இடத்தை விடுத்துப்போகவேண்டும்,' எனக் கத்தினுன்.

தளபதி ஓடிக்கொண்டேயிருந்தான். சிலர் அவனைத் தொடர்ந்து சென்று பிடித்துக் கொண்டனர்.

'அவளைக் கொன்று விட்டேன்; அவளைக் கொன்றுவிட்டேன்,' என அறியாக் குழந்தையைப்போல அழுது அரற்றிக் கொண்டிருந்தான் தளபதி.

# சத்யகாமன்

ஒரு நாள் அறிமுகமில்லாத ஒரு சிறுவன் கௌதமரிஷியின் ஆசிரமத்திற்கு வந்து புஷ்ப-பலாதிகளைச் சமர்ப்பித்து அவரை, வணங்கி "தேவா, மகத்தான சத்திய மார்க்கத்தை தாங்கள் எனக்கு உபதேசித்து அருள வேண்டுகிறேன். என் பெயர் சத்ய காமா," என்ருன்.

குரு சொன்னுர், "உனக்கு மங்களமுண்டாகட்டும். குழந்தாய், உன் வம்சம் யாது? உயர்ந்த அந்த மார்க்கத்தை அடைய விழைவது பிராமணனுக்கே உகந்தது."

"சுவாமி, என் வம்சம் எனக்குத் தெரியாது. என் தாயிடம் கேட்டு வருகிறேன்" என்று கூறிச் சென்ருன்.

வீட்டிற்குவந்ததும், தன்னை அணைத்து உச்சி முகந்த தாயிடம் நடந்த விஷயங்களைக் கூறி, "அம்மா, என் தந்தை யார்? பெயர் யாது? என வினவினுன்.

அந்தத்தாய் தன் பார்வையைத் தாழ்த்தி, மெதுவாகச் சொன்னுள், "என் இளமைப் பிராயத்தில் நான் வறுமையில் உழன்றதன் காரணமாக எனக்குப்பல யஜமானர்கள் இருந்தனர். உன் அன்னை ஜாபாலாவின் மடியில் நீ தவழ்ந்தபோது, 'கணவன்' என்று அவளுக்கு யாருமில்லை. என்ருள்.

உதய சூரியனின் பொற்கிரணங்கள் ஆசிரமத்தின் மரங்களின் முகட்டில் முட்டிச் சிதறிக் கொண்டிருந்தன. சீடர்கள் ஸ்நானம் செய்துவிட்டு, தலையின் ஈரம் காயாமல் முடியிலிருந்து நீர் சொட்ட, நேம-நிஷ்டையுடன் குருவின் முன் அப் பழைய மரத்தினடியில் அமர்ந்திருந்தனர்.

அவ்வமயம் சத்யகாமா வந்து கௌதமரிஷியிடம் தன் அன்னை கூறியதை அப்படியே சொன்னுன்.

உடனே, தேன் ராட்டிலிருந்து கலைக்கப்பட்ட தேனீக்கள் போல மாணவர்களிடமிருந்து முணுமுணுத்தல் தோன்றியது.

கௌதமர் தன் இருக்கையினின்றும் எழுந்து, அப்பையனை மார்புறத் தழுவிக் கொண்டு "குழந்தாய், பிராமண சிரேஷ்டர்களிலும் சிறந்தவன் நீ. சத்யமே உனது பூர்வீக வம்சம்," என்ருர்.

— கவி. ரவீந்திரநாத் டாகூர்

# தலாய்லாமா திருமணம் செய்துகொள்ளலாமா ?

— ஏ. ஆர். ராஜாமணி

சென்ற ஆண்டு செப்டம்பர் 20-ந் தேதி புதுதில்லி ஹிந்துஸ்தான் டைம்ஸ் நாளிதழில் ஒரு செய்தி சர்வ சாதாரண மாகப் பிரசுரிக்கப்பட்டிருந்தது. அதாவது-நமது 'குன்றக்குடி அடிகளார்' உடல் நலத்திற்காகத் திருமணம் செய்துகொள்ளப்போவதாக ஓரிரு ஆண்டு களுக்கு முன்பு தமிழகப் பத்திரிகைகள் வெளியிட்டிருந்த செய்திகளைப்போல்!

ஆனல் இது என்ன ?

அன்று மாலையே ஹிந்துஸ்தான் டைம்ஸ் காரியாலயத்திற்கு ஆட்சே பணைத்தந்திகளும் கண்டனக் கடிதங் களும் மலையாக வந்து குவிந்துவிட்டன. பற்றுக்குறைக்கு, அதன் ஆசிரியர் திரு. பி. ஜி. வர்கீஸிற்கு ஓயாத டெலிபோன் அலறல் வேறு!

மறுநாள் 21—9—71 ஹிந்துஸ்தான் டைம்ஸின் முதல் பக்கத்தில் 'நேற்றையச் செய்தி'க்கு மறுப்பொன்று வெளியாகியது. இந்த அறிக்கையைப் பத்திரிகைகளுக்கு அனுப்பியவர் தவத்திரு. தலாய்லாமாவின் தில்லிப்பிரதிநிதி திரு. நின்கீ. ஹிந்துஸ் தான் டைம்ஸ் உள்ளிட்ட தலைநகரின் ஆங்கில நாளேடுகள் அனைத்தும் இந்த 'மறுப்பு'ப் பிரகடனத்தை வெளியிட் டிருந்தன.

என்றாலும், இத்துடன் 'பிரச்னை' தீர்ந்துவிடவில்லை!

29—9—71 புதனன்று மாலை சில புத்த பிட்சுக்குள், கானட் சர்க்களிலுள்ள ஹிந்துஸ்தான் டைம்ஸ் காரியாலய வராந்தாவை நோட்டமிட்டுக்கொண்டிருந் தனர். எவரோ வழிப்போக்கர்கள் என்று நினைத்த நினைப்புக்கள் பொய்யாகி, அன்றிரவு எட்டுமணி அளவில் பதினைந்து நபர்கள் அடங்கிய ஒரு திபேத்தியர்குழு அந்த இடத்தில் மேடை அமைத்து, அதன்மேல் தலாய்லாமாவின் புகைப் படத்தைப் பிரதிஷ்டை செய்தனர். சுற்றி யுள்ள தூண்களில் பல வகையானக் "கோரிக்கை கோஷங்கள்" அடங்கியப் பிரச்சாரத் தோரணங்கள் தொங்கின!

இடைப்பட்ட இந்த ஒருவார காலத் தில் திபேத்திய நிறுவனங்கள் சார்பாக,

ஹிந்துஸ்தான் டைம்ஸ் வெளியிட்டிருந்த செய்தியை மறுத்தும், அவ்வாறான அவதூறுச் செய்தியை வெளியிட்டதின் மூலம், திபேத்திய மக்களின் பெருங் கடவுளர் தலைவரும், மதகுருவுமான தலாய்லாமாவின் பிரம்மசரியத்தைப் பழித்தும், - மத நிந்தனை செய்தும் பௌத்தத்தின் புனிதத்தைக் களங்கப்படுத்தியக் கடும் குற்றத்திற்காக, அந்த நாளேடு உடனடியாக, அதன் முதல் பக்கத்தில் "ஐந்து பாயிண்ட்" பெரிய எழுத்துக்களில் தன்னுடைய வருத்தத்தைத் தெரிவித்துக்கொள்ளவேண்டும் என்றும் நகரெங்கிலும் துண்டுப் பிரசுரங்கள் விநியோகிக்கப்பட்டன.

இவை தவிர, புத்தவிஹார் சார்பிலும், திபேத்தியர் மன்ற அமைப்பிலும் காரசாரமான கண்டனத் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இவ்வளவு 'ரகளை'களுக்கும் காரணமான 'அந்தச் செய்தி'தான் என்ன?

"அமெரிக்க அமைதிப்படை ஊழியையும், நேபாளம், இந்தியா ஆகிய இடங்களிலுள்ள திபேத்திய அகதிகள் முகாம்களில் பணியாற்றியவரும், தற்போது தலாய்லாமாவின் வாசஸ்தலமான தர்ம சாலாவில் தங்கியிருப்பவருமான மிஸ் டெல்பா மாபி (MISS DELFA MAFI) என்கிற யுவதியைத் தலாய்லாமா திருமணம் செய்துகொள்ள இருக்கிறார்!"

"நேபாளத் தலைநகர் காட்மாண்டுவிலிருந்து வெளியாகும் நேபாளி மொழி-வாரப்பதிப்பில் வெளியாகியிருந்த செய்தியை ஆதாரமாகக்கொண்டு, ஹிந்துஸ்தான் டைம்ஸின் காட்மாண்டு நிருபர் திரு. அசோக் வியாஸ் அனுப்பியச் செய்தியைத்தான் நாங்கள் பிரசுரித்தோம். திபேத்தியர் சமூகத்திலிருந்து அதற்கு மறுப்பு வந்தபொழுது அவற்றையும் தாமத






மின்றி வெளியிட்டுள்ளோம். இதற்கு மேல் நாங்கள் தனிப்பட்ட முறையில் எதற்காக மன்னிப்பு விளக்கம் வெளியிட வேண்டும்?'' என்பது ஹிந்துஸ்தான் டைம்ஸின் வாதம்!

''இவ்வாறான சட்ட நுணுக்கங்கள் எல்லாம் எங்களுக்குப் புரியாது; திபேத்தின் ஐநூறு ஆண்டுகால ஆட்சியாளர்களான பதினான்கு தலாய்லாமாக்களின் வரலாற்றிலேயே கேள்விப்பட்டிராத செய்தியை வெளியிட்டு, எங்கள் மத உணர்ச்சியைப் புண்படுத்தி, தலாய்லாமாவையும் அவமதிக்கும்விதத்தில் அவரது 'புலனடக்கத்திற்கு' மாசு கற்பிக்கப்பட்டுள்ளது — உலக நெடுகிலும் பரவலான வாசகர்களைக்கொண்ட ஹிந்துஸ்தான் டைம்ஸில்தான்!''

என்றவாறு, முசோரி, தர்மசாலா முகாம்களிலிருந்து ஒரு திபேத்திய அணியினர் திரண்டுவந்து, ''சாகும்வரை'' உண்ணாவிரதமேற்று, ஹிந்துஸ்தான் டைம்ஸ் காரியாலய முகப்பில் முற்றுகையிட்டனர். இந்தக்குழுவினரில், பௌத்த பிட்சுக்களான 'சில பெரியவர்'களும், 'இளம்' பெண்களும் அடங்குவர்.

நல்லது! இதற்கு என்னதான் முடிவு?

''தலாய்லாமா அவர்களுடன் தொடர்புகொள்ள முயற்சித்துவருகிறோம். அவர், தன் சீடர்களுக்கு 'நியாயத்தை' உணர்த்துவார்!'' என்கின்றனர் ஹிந்துஸ்தான் டைம்ஸின் நிர்வாகிகள். அவர்களது நம்பிக்கை பொய்க்கவில்லை. இறுதியில் ஹிந்துஸ்தான் டைம்ஸ் ஆசிரியர் திரு. வர்கீஸின் வேண்டுகோளும், உறுதிமொழிகளும் ஏற்கப்பட்டு, மறியல் அணியினர் அகன்றனர். இதில் ஒரு விந்தை. இந்த விவகாரங்கள் குறித்து, தவத்திரு. தலாய்லாமா அவர்கள் எதுவுமேகூற விரும்பாமல், உன்னத புருஷராகச் செயல்பட்டது, அவருடைய மதிப்பை மேலும் உயர்த்திவிட்டது! ●

# PUBLIC TRUST

T. R. Kuppuswami

Was Gopanna justified in spending The state money of twelve lac varahans in the renovation of Sri Rama's temple at Bhadrachalam ?. The son of his former minister Linganna was trusted by Sultan Tanasha. The young officer should have known that it was embezzlement of Government money. Nevertheless, he, a noble soul, did it. Tradition and history tell us that the enraged Sultan threw Gopanna into prison and there he languished for twelve years before divine succour came to him.

What made Gopanna to utilize the money on a temple, the money that did not belong to him? Gopanna was a learned man and wise. Every one acclaimed him as very godly in his ways.

Gopanna had once spent the state treasure in the improvement of lands thereby increasing the revenue for the State Treasury. The king was pleased with his officer's initiative. This should have encouraged Gopanna to handle government money lightly. He should have thought that he could reimburse twelve lac gold pieces in due course. His pleadings fell on deaf ears and he was clamped in jail. The story goes that he was tortured in his cell as was the practice in days of yore. At the end of the twelfth year Sri Rama and Laxmana appeared before the Sultan at dead of night and paid back the money due to him from Gopanna.

Would Gandhiji do such a thing had he been placed in the position of Gopanna more popularly called Ramadoss ?

For aught we know of Gandhiji, he would not have done that act of indiscretion. We remember yet how he held Kasturba before the bar of Indian opinion when she took out a rupee from a fund that Gandhiji had been collecting for the upliftment of the Harijans. Kasturba argued with her spouse saying that the money was spent to buy vegetables to feed a few belated guests at the ashram. She intended to inform him of it him in the morning. But Gandhiji would not listen to her. He told her that she should not have touched the money given to him by the public for a particular purpose. The fact that Gandhiji's integrity shot up sky high and immortalised him is still green in our memory. Millions flowed into his hands because he would not touch a paisa for his use. ★

# Plenty in Poverty

— T. R. Kuppuswami

A song lasts but a few minutes. Why then should therein be jarring notes? The lily lives for a day. Should it be allowed to wither before the even-song? Man's life is short as a span. Should we not put it to the best use?

Let life therefore be sweet as a song, fragrant and beautiful as a flower. Let life be lived usefully for a useful life is productive of sweetness and beauty.

How to make the best of our life? Are we kings to scatter plenty and trace happiness in the faces of people? No, we are not. Our lot is humble. We cannot be substantially generous. Poor in our purse we are, but we may yet be rich in our heart. We may not throw out a park to public use. We may yet plant a few shady trees unobtrusively. If we cannot entertain a large number of guests we may yet save our neighbour from starvation. We may not be rich enough to build a school for children. We may yet keep the path of the school-going children free of glass pieces and nails. Being pinched ourselves, we may yet walk to the public tap to close it when it flows to no purpose .. When we see two little boys fighting on the roadside, tearing each other by their hair, we may walk up to them and persuade them to stop fighting and be friends as they had been before. Our poverty prevents us from helping the needy but we need not withhold our sympathy for them. We may desist from doing anybody any harm. A smile can be worn without any inconvenience. A gentle word cannot cost us anything. Conscientious performance of our duty, whatever our avocation be, with a feeling of involvement, is fruitful of much happiness to the employer and the employee... Little acts of goodness are tantamount to a life fully lived as little drops of rain make the vast occan. ★

# உதாரணம்

— P. S. V. சுப்ரமணியம்

மரங்களடர்ந்த ஒரு காடு. முழுநிலா முளைத்தெழுந்த இரவு. இளங்கோடை. இதமான தென்றல். காட்டு மிருகங்களெல்லாம் ஒன்றுகூடி, மனிதர்கள் தம்மை வேட்டையாடுவது சரிதானு; தாம் அவர்களுக்குத் தாழ்ந்தவர்களா என்று சர்ச்சை தொடங்கின. ஒவ்வொன்றும் தான் மனிதனுக்கு வழிகாட்டியாகவும், உதாரணமாகவும் இருப்பதாகச் சொல்லி அத்தகைய தங்களை மனிதர்கள் மதித்தலே வேண்டும் எனச் சொல்லின.

"உழைப்பிற்கு உதாரணம் நான்," என்றது மாடு.

"நன்றிக்கு உதாரணம் நான்," என்றது நாய்.

"தந்திரத்திற்கும், சாதுர்யத்திற்கும் உதாரணம் நான்," என்றது நரி.

"பலத்திற்கு உதாரணம் நான்" என்று பீற்றியது யானை.

"பொறுமை என்னும்போது என்னைத் தான் சுட்டுவார்கள்," என்றது கழுதை.

"மானம் என்ற உயர்ந்த பொருளுக்கு நானே சான்று," என்று தன் கவரிபடர நிமிர்ந்து நின்றது மான்.

"சீற்றத்திற்கு என்னிலும் சிறந்த உதாரணம் மனிதன் கண்டதுண்டோ?" என்றது புலி.

"காம்பீர்யமே ஒரு அலாதி சக்தி. அதற்கு நானே உரியவன்," என்று பிடரியைச் சிலிர்த்தது சீயம்.

குரங்கு ஒன்றும் சொல்லவில்லை. அதைப்பார்த்து மற்ற மிருகங்கள் ஏளனமாய்ச் சிரித்தன.

"ஏன், சேட்டைக்கு நான் உதாரணம் என்று தானே சிரிக்கிறீர்கள்? உங்கள் ஞானம் அல்பம். என்னைக் கோயிலில் வைத்துக் கும்பிடுகிறுர்களே. அந்தத் தகுதி உங்களில் யாருக்காவது உண்டா?" என்று பூரித்தது குரங்கு.

மேலே மரத்திலே சலசலப்புக் கேட்டது. மிருகங்களெல்லாம் அண்ணுந்து பாத்தன.

"உங்கள் பெருமையையே பேசிக் கொண்டிருக்கிறீர்களே. நாங்கள் என்ன, சளைத்தவர்களா?" என்று இரைந்தன புள்ளினம்.

"அழகுக்கு நானே எடுத்துக்காட்டு. என் தோகை மட்டுமே அழகான பெண்ணிற்கு அடைமொழியாயிற்றே" என்றது மயில்.

"'அன்ன நடை' என்று கேட்டதில்லைபோலும்! அழகைவிட அங்க அசைவில் ஒரு நளினம்; ஒய்யாரம். அதற்கு நானே எடுத்துக்காட்டு," என்றது அன்னம்.

"வாயைத் திறந்தாலல்லவா அழகின் மதிப்புத் தெரியும். காக்கைபோல் குரலிருந்தால் அழகு மட்டும் எடுபடுமா? அழகில்லாவிட்டாலும் இனிய குரலுக்கு நெகிழாதவர் யார்? இசையில் மயங்காதார் உண்டோ? "கோகிலகான" என்று பட்டம் சூட்டிக்கொள்கிருர்களே. இதற்

கெல்லாம் ஆதாரம் நான்,'' என்று இனிமையாக இடித்துரைத்தது குயில்.

''அது சரிதான். இசைக்கும் குரலும், பேசும் குரலும் ஒன்ருகவா இருக்கிறது? பேசும்போதும் இனிமை தோன்றவேண்டும். அதற்கு என்னை நிகர்வாருண்டோ? ''கிளியின் நாவை இருப்பிடம் கொண்டாய்'' என்று என் 'நா'வினிமையை உயர்த்தியிருக்கிருர்கள். தவிர என் சிவந்த வாயையும், சிடுக்குப் போன்ற என் மேனியையும், பார்ப்போரைக் கவரும் பசுமை வண்ணத்தையும் கொண்டு பெண்களை எனக்கே உதாரணம் காட்டுகிருர்கள்,'' எனத் தெள்ளென மொழிந்தது கிளி.

கரகரத்த தொண்டையைக் கனைப்பது கேட்டது.

'''காக்கா குரல்' என்று ஏளனமாய்ச் சொன்னதே குயில்; அதற்கொன்று நினைவு படுத்துகிறேன். நான் சுயநலமி வம்சத்தைச் சேர்ந்தவனல்ல. நல்லதை எல்லாருடனும் பகிர்ந்துகொள்வது என்ற பழக்கத்தை உலகிற்கு நிதர்சனமாக்கியதே நாங்கள்தான். சமுதாயச் சகவாழ்வு, சோஷலிஸம் என்கிருர்களே; அந்தத் தத்துவத்திற்கு வித்திட்டதே நாங்கள் தான். அதனுல்தான் அந்த நன்றிகெட்ட குயிலின் குஞ்சுகளைக்கூட நாங்களே உருவாக்கித் தருகிறேம். பட்டினி கிடப்பவன் பாட்டையும், பேச்சையும் ரஸிப்பானு? ''மானம், குலம், கல்வி... தேனின் கசிவந்த சொல்லியற்மேல் காமுறுதல்... எல்லாம் பசிவந்திடப் பறந்துபோம்'' என்று எவ்வளவு அப்பட்டமாகச் சொல்லியிருக்கிருர்கள். எனவே, பசிதீர உணவை எல்லோருடனும் பகிர்ந்து கொள்ளவேணும் என்ற சமுதாய உணர்வைப்பரப்பும் எங்கள் கொள்கைக்கும், உதாரணத்திற்கும் ஈடு உண்டோ? ''பக்ஷமாயிருங்க; பகிர்ந்துண்டு வாழுங்க; பழக்கத்தை மாத்தாதீங்க'' என்று ஒரு பாட்டுக்கூட எங்களைக் காட்டி, மனித சமுதாயத்தை இடித்துக் கூறியிருக்காங்க,'' என்று ஆத்திரம் பொங்க ஒரு லெக்சரே அடித்தது காகம்.

*ஏராளமான உரைகள் நிகழ்த்துவதனுல் நாம் சுய ஆட்சிக்குத் தகுதி உடையவர்களாக முடியாது. நமது நடத்தையினுல் அந்தத் தகுதியைப் பெறவேண்டும்.*

இந்தச் சர்ச்சையையெல்லாம் கேட்டுக் கொண்ட உச்சிவானில் வந்து நின்றது சந்திரன். ''என்னவோ அழகாம்; பலமாம்; இசையாம்; இனிமையாம். தன்னலமற்ற சேவையின்முன் இதெல்லாம் எம்மாத்திரம்! பகவத் கீதையிலும் இதையே பகவான் வலியுறுத்தியிருக்கிருர். ''பரோபகாரம் பரமம் பவித்ரம்'' என்கிறது வேதம். ''கரையிருளை நீக்கக் கருதாது, உலகின் நிறை இருளை நீக்கும் மேல் நின்று'' என்று தனது சுயதேவைகளையோ, துன்பங்களையோ ஒரு பொருட்டாக நினையாமல் பிறர்க்கு உற்ற துன்பத்தையே நீக்குதல்வேண்டும் என்ற எனது சித்தாந்தம் மனித குலத்துக்கே ஒரு எடுத்துக்காட்டு. இதை மனிதனே உணர்ந்து, வாழாதபோது, கேவலம் விளங்கினங்களுக்கும், புள்ளினங்களுக்கும் என் உயர்வைப்பற்றித் தெரிய என்ன ஞாயமிருக்கிறது! பூவுலகில் தனக்கு முன்னேடிகளாகவும், பல தத்துவப் பிரதர்சினிகளாகவும் விளங்கிய புள்ளினங்களையும், விலங்கினங்களையும் அழிப்பதுடன் வானவெளியில் பரதத்வப் பிரதர்சினிகளாக விளங்கும் என்னையும், பிற கோள்களையுமே மனிதன் அலைக்கழிக்கத் தலைப்பட்டுவிட்டான். நன்றிகெட்ட மனிதன் - இனி நலிந்தால் ஆச்சரியப் படவோ, அநுதாபப்படவோ என்ன இருக்கிறது?'' என்று பெருமூச் செறிந்தது.

Shivaji February-1972 Regd No. M. 3398



## அமுத வாக்கு

ஜாதி மதங்களைப் பாரோம்—உயர்
ஜன்மமித் தேசத்தி லெய்தின ராயின்
வேதிய ராயினு மொன்றே—அன்றி
வேறு குலத்தின ராயினு மொன்றே



Edited and Published by its owner Sri Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers
2-A, Fort Station Road, Trichy-2. Annual Subscription Rs. 10